# வலி

கை கரிப்பானையைத் தேய்த்துக் கொண்டிருந்தது. வேறு யாராவது உதவியிருந்தால், அவ்வளவு சீக்கிரம் 'அவுங்க' பக்கத்தை விட்டு எழுந்து வந்திருக்கவேண்டிய தில்லை. இந்த இழவை எல்லாம் எடுக்கவேண்டி இருந்திருக்காது. எந்த நினைப்பில் இந்த அதிகப்படி எல்லாம் வாங்கி வந்தாரோ! நாக்கு ருசி சரிதான்-இப்பொழுது கை தேய்கிறது யாருக்கு?

கரிப்பானையைத் தேய்த்துக் கொண்டிருந்தவள் கண்ணுக்கு எதிரே வெள்ளைத் துணி பறந்தது. திடுக்கிட்டுப் பார்த்தாள்; ஒன்றுமில்லை. எதிர்ப் புறத்து, ஜன்னல் வழியாக சூரியன் நுழைந்து சுவரில் வெள்ளைத் துணியைக் கட்டிக் கொண்டிருந்தான்.

நேரம் ஆகிவிட்டது. இன்னும் அவர் தூங்கிக்கொண்டிருக்கிறார். எழுப்பலாம். தெரியும் தெரியும். நீ முந்தி எழுந்தா நானும் எழுந்துடணும். நீ அழுதா நான் அழணும். நீ சிரிச்சா நான் சிரிக்கணும்; குத்திக் காட்டுவார். அதிகப்படி சாப்பாடு, இறை தின்ன தூக்கம். இருக்கட்டும். தூங்கட்டும் தூங்கட்டும்...

பாதி பானைகளுக்குமேல் தேய்த்தாகிவிட்டது. பாதி பாக்கி, தண்ணீர் பிடிக்கும் அண்டாவும் பாக்கி. திரும்பியும் தேய்க்க ஆரம்பித்தாள்.

காலங்காத்தாலே போய் தெருக்களைச் சுத்திவந்தாலே வரவர மோசமாப் போவுது. காசு கூடத்தான் கிடைக்குது.

கரி விலை ஏறிப் போச்சு, வெள்ளீயம் விலை ஏறிப் போச்சு. யாரு ஏத்தருனே கடவுளுக்குத்தான் வெளிச்சம். பித்தளைப் பொடி விலை ஏறிப்போச்சு. தகடு விலை கேக்க வேண்டிய தில்லை. வர்றது ரெண்டு பேருக்குப் பேரீதல்ல. இது வேறே வந்துகிட்டிருக்கு.........

பானைகளை ஒன்று மாற்றி ஒன்று தேய்த்துக் கொண்டிருந்தகை அண்டாவின் மேல் பட்டு நின்றது. சூரியன் கட்டின வெள்ளை வேஷ்டி சுவரில் பாதியும் தரையில் பாதியுமாகக் கிடந்தது.

இன்னமும் தூங்கருரே. இல்லாட்டி உடம்பு கிடம்பு நல்லா இல்லியா தெரியல்லையே.

அண்டாவைத் தேய்க்க ஆரம்பித்தாள். அவளை அறியாமல் குதித்துக் கொண்டிருந்த ஆத்திரம் பரபரப்பாகி அண்டாவைத் தேய்த்துத் தீர்த்தது.

அவர் தூக்கம் தீரவில்லை. கீழே புரண்ட துணியை சூரியன் எடுத்துக்கொண்டு போய்விட்டான்.

இன்னம் தூங்கிளுல் தெருக்களுக்கு எப்பொழுது போவது? இவ்வளவு நேரம் தூங்கிப் பார்த்ததே இல்லியே. இன்னிக்கென்ன?

பானைகளையும் அண்டாவையும் துடைத்து அடுக்களையில் வைத்துவிட்டுத் திரும்பி தூங்கிக் கொண்டிருந்தவர் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

சொகமாக கவலெ இல்லாமே தூங்கிக் கொண்டிருக்கிருர். எழுப்பிளுலும் வம்பு. எழுப்பா விட்டாலும் வம்பு. எல்லாத்துக்கும் மேலே பொழப்பு இருக்கே. பொழப்பு பெரிசா சொகமா?

அவரை மெதுவாகத் தொட்டு எழுப்பிளுள். தூக்கத்தில் தொடுகிற கையை அவருக்குத் தெரியும். கண்ணைத்

திறக்காமலே கையோடு சேர்த்து இழுத்துக்கொண்டார். இணக்கமாக அவர்மீது அவள் சரிந்தாள்.

"மணி ஒன்பதாவப் போவுது—இது என்ன விளையாட்டுங்க."

"விளையாடறதுக்கு மணி பார்க்கணுமா?"

"வேலைக்குப் போக பார்க்கவேணும்?"

"என்ன வேலை?"

"என்ன வேலையா? பூலோகமோ கைலாசமா தெரியல்லியே? புத்தி கித்தி மாறிப் போச்சா? கையிலே காசில்லாத நேரத்திலே அதை எல்லாம் ராவைக்கு யார் வாங்கியாரச் சொன்னு. அப்பவே புடுச்சு கரிப்பானையைத் தேச்சு கை கசந்து போச்சு. இப்போ என்ன வேலைங்கறீங்களே-நெனைப்போடெ பேசரீங்களா?"

"ஆமா ஆமா ஒனக்கு சொல்லல்லே. அதான் கோவிச்சுக்கறே. இனிமே ஈயம் பூசர வேலை இல்லே".

"ஆ?"

"அந்த வேலை இல்லை."

அவள் முகம் சொடுங்கிற்று. அவர் மீது சரிந்து விழுந்திருந்தவள் தன்னையும் அறியாமல் விலகினாள்.

"சண்டைக் கோழி பின்னாலே போவுது. கோவிச்சுக்காதே. நாளையிலேருந்து சாலையிலே வேலை."

"சாலையா? சாலென்னா?"

"எவர்சில்வர் தொழிற்சாலையிலே"

"அப்புறம், இந்தத் தொழில்?"

"இடிச்ச கூட்டைச் சுத்தி வார குருவியா என்ன மனுசன்?"

"ஒண்ணும் புரியலிங்களே."

"இந்தத் தொழில்லேதான் நாளுக்கு நாள் சம்பாத்யம் குறைஞ்சுகிட்டு வருதே."

"அதான் இன்னம் ரெண்டு மூணு தெருகூட சுத்திக்கிட்டு வரணுமின்னு மண்டையை உடைச்சுக்கிட்டேன்."

"எத்தினி தெரு சுத்தினாலும் கதை இவ்வளவுதான். சின்னப் பெண்டாட்டி வந்தா பெரியவளை யாரு திரும்பிப் பார்ப்பா ?"

ஒரு நிமிஷம் நெருப்பாகப் பார்த்தாள். மறு நிமிஷம் சிரித்தாள்.

"என்னாங்க கிண்டல் பண்றீங்க ?"

"இல்லேடி. எவர்சில்வர் பாத்திரம்தான் சின்னப் பெண்டாட்டி. இப்பொ யாரு பித்தளைப் பாத்திரம் வாங்கறா ஈயம் பூசறா ?"

பெரிய பெண்டாட்டி, சின்னப் பெண்டாட்டி என்று சொன்னபோது அவளுக்கு எல்லாம் புரிந்து விட்டது. தலைக்கும் காலுக்குமாக வரும் துப்பட்டி கிடைத்துவிட்டது. ஆனால் போர்த்திக் கொள்ளத்தான் முடியாது. இஷ்டம் போல் வேலைக்குப்போய் இஷ்டம் போல வீட்டுக்கு வந்து இஷ்டம்போல இருப்பதென்னும் சமாசாரம் இனி இல்லை. இது புரிந்தபோது ஒரு முனகலும் கூடப் பிறந்தது. அது அவளுக்கே தெரியவில்லை.

"ஏன் முனகரே ?"

"இல்லிங்களே என்ன சம்பளம் ?"

"இதுவரை மாசத்துக்கு மாசம் சம்பாரிச்சதைவிட கூடத்தான். ரொம்ப கூட".

"கவலை விட்டுப் போச்சுங்கிறீங்க. சரி வேலைக்கு எப்பொ போகணும் ? வரணும் ?"

"காத்தாலே 6க்குப் போவணும். ராவு ஏழு மணிக்கு வரணும். மூணு மைல் தூரமிருக்கே."

எதுவும் சொல்லாமல் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வையைப் பார்த்து காரணம் புரியாமல் தன் முகத்தைத் துடைத்துக்கொண்டான். புது வேலையை ஒப்புக்கொள்வதிலே சந்தோஷமா பழைய வேலே போச்சேனு வருத்தமா என்று அந்தப் பார்வையிலிருந்து கண்டுபிடிக்க முடியவில்லே. மறு நிமிஷம் அவள் செய்ததைக் கொண்டும் நிர்ணயிக்க முடியவில்லே.

அவனருகில் நெருங்கி உட்கார்ந்திருந்தவள் அவன்மீது சிங்காரமாய்ச் சாய்ந்து விட்டாள். ஏதோ வருத்தத்தை எல்லாம் மூட்டையாகக் கட்டி அவன்மேல் போட்டது போலிருந்தது.

"ஏன், உடம்புக் கென்ன ?"

"தெரியல்லியே திடீருன்னு இடுப்பு நோவுது."